[24th September 1958

பணியில் முன்னணியில் இருப்பதுதான். மீனாட்சி கோயிலில், ஹரிஜன பிரவேசங்கூட, அமைச்சர் அவர்களின் தலைமையின்கீழ்தான் நடைபெற்றது என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

MR. SPEAKER : அவர்களுக்குத் தெரியும் என்றுதான் சொல்லு கிறார்கள். (சிரிப்பு.)

*Pearl fishing and sea-fishing at Tuticorin*

* 493 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state whether there are enough steam launches at Tuticorin for pearl fishing and sea-fishing and if so, how many?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : There is only one vessel "Goherkhaleeli" stationed at Tuticorin. She is mainly intended for pearl and chank fishing work. She is also utilised for fishing operations whenever she is not required for pearl or chank fishing.

9-50 a.m. SRI V. K. KOTHANDARAMAN : இப்பொழுது தூத்துக்குடியில் முத்துக் குளிப்பு நடக்கிறது. அப்படி முத்து எடுக்கக்கூடிய மீனவர்களுக்குப் போதுமான அளவில் ஸ்டீம் லாஞ்சுகள் இல்லை என்று கூறுகிறார்கள். அவர்களுக்கு கொடுத்து வருவதாகவும் சொல்லப்படுகிறது. ஆகவே அவர் களுக்கு அதிகப்படியாக போட்டுகள் வேண்டியதாக இருப்பதால் அப்படிக் கொடுப்பதை அதிகப்படுத்துவதற்குச் சர்க்கார் முயற்சி எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : முத்துக் குளிப்பு வேலைகளுக்கு இப்போது போட்டுகள் அளிக்கப்பட்டு வருகின்றன. மேலும் இன்னும் அதிகப்படியான போட்டுகள் அவசியம் எனத்தோன்று கிறது. இன்னும் அதிகப்படியாக வேண்டும் என்று கேட்டால் கவனிக்கப் படும்.

*Music*

* 494 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கல்லூரிகளில் சங்கீதக்கலை போதிக்கிறார்களா ?

(ஆ) வாத்திய சங்கீதமும் போதிக்கிறார்களா ?

(இ) அப்படியானால், என்னென்ன வாத்தியங்களில் ?

(ஈ) சங்கீதப் பயிற்சி பெற்றவர்களுக்கு வழங்கப்படும் பட்டங்கள் என்னென்ன ?

(உ) அரசாங்கம் இக்கல்லூரிகளுக்கு உதவிவரும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes.

(*b*) Yes.

(*c*) Instrumental music is taught in veena, violin and piano.

(*d*) In cases where music is studied as an integral part of the University courses of studies no separate degree or certificate in Music is issued. Candidates who are successful in the examination for the course in the Central College of Karnataka Music are awarded the title "Sangeetha Vidwan" of the College.

24th September 1958]

(e) In the case of the Queen Mary's College, Madras, where facilities for teaching Music are available, the entire expenditure is borne by Government as it is a Government College. In the case of aided colleges no separate grant for Music department alone is paid. The grant for the Music department is included in the teaching grant assessed for and paid to the College as a whole. The Central College of Karnataka Music is maintained by Government with an annual grant of rupees not exceeding Rs. 25,000 from the Sangeet Natak Akadami, New Delhi.

**SRI A. VEDARATHNAM:** 'இசைக் கருவிகள் பல இப்பொழுது மறைந்துகொண்டு வருகின்றன. அவைகள் எல்லாம் மறைந்து போகாமல் காக்க அந்த இசைக் கருவிகளைப்பற்றி சர்ச்சை செய்து அவைகள் மறைந்து போகாமல் இருப்பதற்கு அவைகளைக் கல்லூரிகளில் கற்றுக்கொடுக்க அரசாங்கம் முன்வருவார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** எந்தக் கருவியில் மக்கள் ஆசை கொண்டு பயின்று வருகிறார்களோ அதில்தான் பயிற்சி கொடுக்க முடியும். யாரையும் பலவந்தப்படுத்தி அதைக் கற்றுக்கொள்ளவேண்டும் என்று சொல்ல முடியாது. ஆகவே மறைந்து போகக்கூடிய கருவிகளில் பயிற்சி பெறவேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது. அதனால் அவைகளில் பயிற்சி பெற ஏற்பாடு செய்ய முடியாது.

**SRI V. K. KRISHNAMURTHY:** விபுலாநந்தர் யாழ் கருவியை கல்லூரிகளில் கற்றுக்கொடுக்க முயற்சி எடுத்துக்கொள்வார்களா என்பதை அறிய விரும்புகிறேன். தமிழிசைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறதா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** யாழைப்பற்றி தனியாகக் கேள்வி போடவேண்டும். தமிழ் இசைக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து முன்னுக்குக் கொண்டு வரவேண்டுமோ அந்த அளவுக்கு முயற்சி எடுத்துக்கொண்டு வரப்படுகிறது.

**SRI K. ANBAZHAGAN:** கர்நாடக சங்கீத கல்லூரியின் பழைய பாடத்திட்டத்தின்படி பெரும்பாலும் தெலுங்கு சாகித்தியங்களையே பாடமாக சொல்லிக்கொடுக்கப்படுகிறது. உண்மையாகவே தமிழ் சாகித்யங்கள் உள்ளதால் அதைப் பயன்படுத்துமாறு செய்ய முன் வருவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM:** எல்லா சாகித்யங்களும் தான் சொல்லிக் கொடுக்கப்பட்டு வருகிறது. அதனால் தெலுங்கு சாகித்யங்களுக்கு விலக்கு அளிக்கப்பட மாட்டாது.

### *Drinking water-supply scheme for Bhavani town*

*495 *Q.*—**SRI P. G. MANICKAM:** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லா, பவானி நகரிலே குடிதண்ணீர் சப்ளை திட்டத்தை அமுல் செய்யவேண்டுமென்று கவர்ன்மெண்டாருக்கு விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றனவா ?

(ஆ) அவ்வாறு அனுப்பப்பட்டிருப்பின் இத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர எடுக்கப்படபட்டிருக்கும் நடவடிக்கைகள் யாவை ?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** (a) Yes, Sir.

(b) The Chief Engineer has submitted outline proposals for a combined water-supply scheme for Bhavani and Komarapalayam. They are under examination.